# 6.தாயுமானவர்

# பராபரக்கண்ணி

பேரா. முனைவர் த. டான் ஸ்டோனி
தமிழ்த்துறை
இலயோலா கல்லூரி சென்னை

- தமிழில் மெய்ப்பொருளைப் பற்றி புகழ்பெற்ற பாடல்களை இயற்றியவர் தாயுமானவர் ஆவார்.
- இவர் நாகப்பட்டினம் மாவட்டத்திலுள்ள திருமறைக்காடு என்று அழைக்கப்படும் வேதாரண்யத்தில் பிறந்தார்.
- இவர் தந்தையார் கேடிலியப்பர் மற்றும் தாயார் கெசவள்ளி அம்மையார் ஆவார்கள்.
- இவர் தமிழ் மொழி, வடமொழி ஆகிய இருமொழிகளிலும் புலமை பெற்றவர்.
- தாயுமானவர் திருச்சிராப்பள்ளியை ஆட்சிபுரிந்த விசயரகுநாத சொக்கலிங்கரிடம் அரசுக் கணக்கராகப் பணிபுரிந்தவர்.
- பின்னர் அப்பதவியைத் துறந்தார்.
- மட்டுவார்குழலி என்னும் மங்கையை மணந்து, கனகசபாபதி என்ற மகவையும் பெற்று வாழ்ந்தார்.
- பின்னர்த் துறவு வாழ்க்கையில் நாட்டங்கொண்டு, திருமூலர் மரபில் வந்த, திருச்சிராப்பள்ளியைச் சார்ந்த மௌன குரு என்பவரிடம் உபதேசம் பெற்றுத் துறவு பூண்டார்.

- தம் எளிய பாடல்கள் மூலம் தமிழ்ச்சமயக் கவிதைக்கு ஒரு தூணாக இருந்தவர் தாயுமானவர்.
- வள்ளலாரும், பாரதியாரும் இத்தகைய எளிய கவிதைகள் பாட இவர் முன்னோடியாகத் திகழ்ந்தார் என்றும் சொல்லுவதுண்டு.
- தவநெறியில் சிறந்து விளங்கிய தாயுமானவர், பல்வேறு திருத்தலங்களுக்கும் சென்று இறைவனைப்பாடி வழிபட்டார். இறுதியில் இராமநாதபுரம் மாவட்டம் இலட்சுமிபுரம் என்னும் ஊரில் சமாதி அடைந்தார்.
- தாயுமான சுவாமிகள் திருப்பாடல் திரட்டு என்னும் நூலில் 56 தலைப்புகளில் 1452 பாடல்கள் உள்ளன.
- அவற்றில் 771 பாடல்கள் கண்ணிகளாகவும், 83 பாடல்கள் வெண்பாக்களாகவும் உள்ளன.
- இவருடைய 'பராபரக்கண்ணி' மிகவும் புகழுடையது.
- இதில் 389 கண்ணிகள் இடம்பெற்றுள்ளன.
- இவருடைய பராபரக்கண்ணியில் இருந்து சில கண்ணிகள் நமக்குப் பாடமாக இடம் பெற்றுள்ளன.

# 1. எண்ணம் அறிந்து உதவ வந்த கருணை மழை

சிந்தித்த எல்லாமென் சிந்தையறிந் தேயுதவ
வந்த கருணை மழையே பராபரமே.

- பொருள்:
- அடியேன் நினைத்தவற்றையெல்லாம் எளியேன் கருத்தறிந்து அருள்செய்யும் பொருட்டு எழுந்தருளிவந்த திருவருள் மழையே.

# 2. ஆனந்த வெள்ளம் வரும் பேராறு

**ஆரா அமுதே அரசே ஆனந்தவெள்ளப்
பெர றே இன்பப் பெருக்கே பராபரமே.**

- பொருள்:
- தெவிட்டாத தெள்ளமுதே, வேந்தே, பேரின்ப வெள்ளம் நிறைந்த பெரிய ஆறே, பேச்சற்ற மவுன வெள்ளமே.

# 3. அறிந்தவர் ஆர் என்று மறைகள் ஒலமிடும் பேரறிவு

ஆரறிவார் என்ன அனந்தமறை ஒலமிடும்
பேரறிவே இன்பப் பெருக்கே பராபரமே.

பொருள்:

- அடிகளே நின் திருவடியினை அறிவார் யாரென்று அளவில்லாத மறைகள் முழங்குகின்றன.
- தானே விளங்கும் பேரறிவுப் பொருளே; பேரின்பப் பெருவெள்ளமே!

# 4. இதயத்தே ஊறித் தித்திக்கும் ஆனந்தம்

எத்திக்குந் தானாகி என்னிதயத் தேயூறித்
தித்திக்கும் ஆனந்தத் தேவே பராபரமே.

- பொருள்:
- எத்திசைகளிலும் நீக்கமற நிறைந்து அடியேன் உள்ளத்தே ஊற்றெடுத்துப் பேரின்பங் கொடுத்துக்கொண்டிருக்கும் குறையா இன்பத்தேனே.

# 5. முத்து, பவளம், பசும்பொன் ஆகியவற்றின் ஒளி

முத்தே பவளமே மொய்த்தபசும் பொற்சுடரே
சித்தேஎன் னுள்ளத் தெளிவே பராபரமே.

- பொருள்:
- முத்தே, பவளமே, மிக்க பசுமை தங்கிய பொன் ஒளியே, பேரறிவே, அடியேன் உள்ளத்துத் தெளிவே!.

# 6. கண், கருத்து, கற்பகம், விண், ஆனந்தம்

6. கண்ணே கருத்தேயென் கற்பகமே கண்ணிறைந்த
விண்ணேஆ னந்த வியப்பே பராபரமே.

- 
- பொருள்:
- அடியேனுடைய கண்ணினும், கருத்தினும், திருந்தமுற எழுந்தருளும் பொன்மரமே, கண்ணிறைந்த திருவருள் வெளியாம் திருச்சிற்றம்பலமே, பேரின்பம் துய்ப்பிக்கும் வியத்தகு பொருளே!

# 7. மனத்தையோ வாக்கையோ திறந்தால் தாக்காமல் தாக்குவான்

வாக்காய் மனதாய் மனவாக் கிறந்தவர்பால்
தாக்காதே தாக்குந் தனியே பராபரமே.

- பொருள்:
- வாய்ப்பொறியும் மனக்கரணமும் தொழிற்படுமாறு நின்றருளினாய் எனினும்
- அம் மனமும் சொல்லுங்கடந்த மெய்யடியார் பால் உணர்விற்கு உணர்வாய் நின்று விளங்கும் ஒப்பில்லாத தனிப் பொருளே,
- 'தாக்காது தாக்குதல்' சுட்டுணர்வு சிற்றுணர்வுகட்குப் புலனாகாது, முற்றுணர்விற்குப் புலனாதல். பொறி - இந்திரியம்.

# 8. என் அன்பைப் பெருக்கி, உயிரைக் காக்க வந்த இன்ப வெள்ளம்

**அன்பைப் பெருக்கிஎன தாருயிரைக் காக்கவந்த இன்பப் பெருக்கே இறையே பராபரமே.**

- **பொருள்:**
- **இறவாத இன்ப அன்பினைப்பெருக்கி,**
- **அடியேனின் ஆருயிரைக் காத்தருளவந்த பேரின்பப் பெருக்கே,**
- **பேராத்தலைவனே;**

# எலும்பு உருகி, நெஞ்சம் இளகிக் கரைய நீ அன்பின் உருவமாக நிற்கிறாய்

- 8. என்புருகி நெஞ்சம் இளகிக் கரைந்துகரைந்து
- அன்புருவாய் நிற்க அலந்தேன் பராபரமே.

பொருள்:

- எலும்பு நெக்குவிட்டு உருகி, மனங்கரைந்து உருகி இறவாத இன்ப அன்புருவாய் நிற்கப் பெருவேட்கையுற்றேன்.
- (அது கிடைக்கப் பெறாமையால்) துன்புற்றேன்.

# என்னால் தாங்க முடியாமல் அப்பா போற்றி என்கிறேன்

அப்பாஎன் எய்ப்பில் வைப்பே ஆற்றுகிலேன்போற்றி என்று
செப்புவதல் லால்வேறென் செய்வேன் பராபரமே.

- பொருள்:
- ஏழையேனுக்குற்ற எழிற்றந்தையே,
- இளைத்தவிடத்துதவும் இறவாத வைப்பே, (பிறப்புத்துன்பத்தினை)
- ஒரு சிறிதும் பொறுக்க முடியாது;
- போற்றியென்று புகழ்ந்து வழிபடுவதல்லால்,
- வேறு என்ன செய்யவல்லேன் யான்?

# உன் சுகக் கடலைப் பருகினால் அன்றி என் தாகம் தீருமா

சொல்லால் அடங்காச் சுகக்கடலில் வாய்மடுக்கின்
அல்லால்என் தாகம் அறுமோ பராபரமே.

- பொருள்:
- மவுன நிலையில் உணர்வின்கண் அறிவதல்லாமல்
- சொல்லினாற் சொல்லுதற்கரிய பேரின்பப் பெருங்கடலில்
- வாய் வைத்துப் பருகினாலல்லாமல்
- அடியேனுடைய வீடுபேற்று வேட்கை நீங்குமோ?

# என் முகத்தைப் பார்க்க மாட்டாயா

- 11. பாராயோ என்னைமுகம் பார்த்தொருகால் என்கவலை
- தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே.
- 
- பொருள்:
- சிவகுருவாகத் திருக்கோலங்கொண்டெழுந்தருளி வந்து அடியேனைக் கண்கூடாக நோக்கிப் பார்த்தருளாயோ?
- அம் முறையாகத் திருநோக்கம் ஒருகால் புரிந்தருளி, அடியேன் படுந்துன்பத்தை நீக்கியருளாயோ?
- திருவாய் மலர்ந்தருள்வாய்.

# என் கவலை தீராதோ

- 12. ஓயாதோ என்கவலை உள்ளேஆ னந்த வெள்ளம்
- பாயாதோ ஐயா பகராய் பராபரமே.
- 
- பொருள்:
- ஐயனே! அடியேன் கவலை ஓய்ந்தொழியாதோ?
- திருவருளால் உணர்வினுள்ளே பேரின்பப் பெருவெள்ளம் பாயாதோ?
- பகர்ந்தருள்வாயாக.

# உன்னைப் பிரிந்தால் என் உள்ளம் தீயில் இட்ட மெழுகு போல் உருகும்

- 13. ஓகோ உனைப்பிரிந்தார் உள்ளங் கனலில்வைத்த
- பாகோ மெழுகோ பகராய் பராபரமே.
-
- பொருள்:
- ஐயோ! தேவரீரைப் பிரிந்த மெய்யடியார்தம் உள்ளம் தழலிலிட்ட வெல்லப்பாகோ? அல்லது மெழுகோ? திருவாய் மலர்ந்தருள்வாயாக.

# இனியும் கவலைப்பபட முடியாது. என்னைப் பார்

- 14. கடலமுதே தேனேயென் கண்ணே கவலை
- படமுடியா தென்னைமுகம் பார்நீ பராபரமே.
- 
- பொருள்:
- பாற்கடலமுதே, தேனே, அடியேன் கண்ணே, என்னால் இனியும் மனக்கவலையினைப் பொறுக்க முடியாது; எளியேன் முகத்தைப் பார்த்தருள்வாயாக.

# நீ தள்ளிவிட்டால் நான் தவிப்பேன்

- 15. உள்ளம் அறிவாய் உழப்பறிவாய் நான்ஏழை
- தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன் பராபரமே.
- பொருள்:
- அடியேனுடைய மனநிலையினைத் தேவரீர் அறிந்தருள்வீர்: அடியேன் துன்பப்படுதலையும் உணர்ந்தருள்வீர்; ஏழையேனைத் தள்ளிவிடுவீராயின் யான் மிகவும் வருந்துவேன்.

# பசு கன்றுக்குக் கனிவது போல எனக்கு உன் கருணையைத் தா

- 16. கன்றினுக்குச் சேதா கனிந்திரங்கல் போலஎனக்
- கென்றிரங்கு வாய்கருணை எந்தாய் பராபரமே.

- பொருள்:
- தானீன்ற கன்றினுக்கு ஈன்றணிய தாய்ப்பசு இரக்கங்கொண்டு வேண்டுவன புரிவது போன்று, பெருந்தண்ணளியுடைய எந்தையே;
- அடியேன்மாட்டு நீ எந்நாளில் இரங்குதல் செய்தருள்வை?

# உன்னை எண்ணி எண்ணி என் நெஞ்சம் புண்ணாகிறது

**எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி எண்ணி ஏழைநெஞ்சம் புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே.**

- பொருள்:
- கிடைத்தற்கரிய பலவற்றையும் இடையறாது எண்ணி எண்ணி அடியேனுடைய நெஞ்சம், புண்படச் செய்தது; இனிப் போதும்.

# கடல் அலையில் துரும்பு போல் அல்லாடுகிறேன்

17. ஆழித் துரும்பெனவே அங்குமிங்கும் உன்னடிமை பாழில் திரிவதென்ன பாவம் பராபரமே.

பொருள்:

- தேவரீருடைய அடிமையாகிய யான்
- பெருங்கடலிற்பட்ட சிறு துரும்பென்று சொல்லும்படி
- அளவில்லாத பிறவிகளில் வீணாயலைந்து திரிவது என்ன பயன் ஆகும்?

# துன்பக் கண்ணீரில் துவள்கிறேன்

துன்பக்கண் ணீரில் துளைந்தேற்குன் ஆனந்த
இன்பக்கண் ணீர்வருவ தெந்தாள் பராபரமே.

- 
- பொருள்:
- பிறவிப் பெருந்துன்பக் கண்ணீரில் மூழ்கின யான்
- அது நீங்கி நின்பேரின்பம் உற்று இன்பக்கண்ணீர் பெருக்குவது எந்நாளில்?